# கவிச்சொல் கேளீர்!

மா. வரதராஜன்.
"விமலன்"




---

ஜெயந்தி பதிப்பகம்,
விஜயபுரம்.
(தஞ்சாவூர் ஜில்லா)

# காணிக்கை!

ஆர்வமெனும் கனலேற்றி
அருங்கவிதை சுவையூட்டி
சீர்வளரும் தமிழின்பச்
செழுஞ்சுவையை உணர்த்திட்ட
பேர்வளரும் நற்கவிஞ!
பெருங்குணமார் கலைவாண!
நேர்வளரும் உளமகிழ
நினக்கிதுவே காணிக்கை!

—மா. வரதராஜன்

அச்சிட்டோர்:
கிருஷ்ணா (பவர்) பிரஸ், திருவாரூர்.

6615

# நல்லாசிகள்........!

.........'கவிச்சொல் கேளீர்' என்ற கவிதைத் தொகுதியைப் படித்து மிக்க மகிழ்ச்சியடைந்தேன். தங்கள் கவிகள் சொல் வளமும் பொருள் நிறைவும் கற்பனையும் பொருந்தியுள்ளன. எளிய பதங்களும் இனிய நடையும் அவற்றின் சிறப்புகள் தங்கள் கவித்திறமைமென் மேலும் வளர்ந்து பெரும் புகழும் பெருமைகளும் உண்டாக் கும் என்று மனமார வாழ்த்தி இறைவனை வணங்குகிறேன்.

ஆஸ்தான கவிஞர் திரு. வெ. இராமலிங்கம் பிள்ளை.

'வளமையுற்ற நெஞ்சினிலே வாழ்வின்பச் சுவை கூட்டும் இளமைத் துடிப்பினிலே இங்ஙனமோர் கவியாகி, நம் வரதராசன், நம் நெஞ்சிலே குமிழிடும் இளமையை அமிழ்தான தமிழிலே அழகோடு பாடுகிறார். கண்ணனைய கவிதைகளால் விண்ணளவத் தமிழ் வளர்க்கும் அவர் பணியைக் கண்டு என் மனமும் பண்பாடுகிறது.

—திரு அரு. ராமநாதன் ஆசிரியர் "காதல்"

......பழைய காலத்தைப் போன்று தமிழிலே கருத் தாழமும் சொற்சுவையும் கொண்ட கவிதைகள் மிளிர வேண்டும் என்பது பலாது அவா. இத்தகைய பேராவலைத் தீர்க்க வருவதுபோல் நண்பர் திரு. வரதராஜன் அவர் களின் கவிதைகள் தோற்றுவிக்கின்றன. அவரது சீரிய முயற்சி போற்றப்படவேண்டியது ஆகும். "வளமையுற்ற நெஞ்சினிலே வாழ்வின்பச் சுவைகூட்டும் இளமைத் துடிப்பினிலே......" கவியாகிவிட்ட அவரது இனிய கவிதைக் குயிலைக் கேட்கக்கேட்க இனிப்பு சொட்டு கிறது........... வாழ்வின் இயற்கை நிகழ்ச்சிகளைப் பல கோணங்களினின்றும் தமது கவிதைக் கண்களால் கண்டு கற்பனைத் திறத்துடன் கவிதை புனையும் கவிஞர் ஆற்றல் பலகாலும் பெருகவேண்டும் அவரது கவிச் சொல்லினால் தமிழ் மக்கள் ஊக்கம் பெறவேண்டும் என்பதே என் விருப்பம்.

திருமதி எஸ். திரிபுரசுந்தரி, "லக்ஷ்மி"

Ma. Varadarajan is a dreamer. His dreams are sublime They hold the mirror upto life, and are woven in to a superb texture with fine warp and woof of filmy gossamer. They throw on our sordid life a rich glow of enduring glory that makes us feel that life is worth living.

Prof. C. S. KAMALAPATHI, M. A.

நண்பர் வரதராஜன் கவிதைகளிலே பிரேமையின் கீதஒலியும், வோர்ட்ஸ்வொர்த் கூறிய பிரபஞ்சத்தின் துயர இசையும் ஊடும் பாவுமாக குரல் கொடுக்கின்றன. நல்லதோர் வீணை செய்து நலமிகு கவிதைபாடி வையம் பாலிக்க முன் வந்த வரதராஜன் வாழ்க! அவர் கவித்திறன் வளர்க!

—திரு டி. வி. ஸ்வாமிநாதன் பி. எஸ். ஸி.

கவிஞர் மா. வரதராஜன் அவர்கள் ஒரு சோம்பேறி. உயர்ந்த கற்பனையழகும், கையாளும் சொல்லழகும் நிறைய இருந்தும் அடிக்கடி எழுதவில்லையே!

—கவிஞர் என். எஸ். சிதம்பரம் ஆசிரியர், "இசையருவி"

தமிழ்த்தாயின் இன்பபூங்காவில் மலர்ந்துள்ள சிறிய பூங்கொடி கவிஞர் வரதராஜன் தாம் அங்கங்கே எழுதிய கவிதைகளிலிருந்து சிறிய மலர்களின் இதழால் ஒரு சுதப்ப மாலை கட்டித்தருகிறார். ஒவ்வொன்றும் ஒவ்வொரு மணம்; மொத்தத்தில் எல்லாம் சேர்ந்து மனசிற்கு 'பரமசுகம்' தருகின்றன. படிக்கப்படிக்க இன்னும் படிக்க வேண்டும் என்ற ஆவல் தந்தால் அதுதானே வளரும் இலக்கியத்திற்கு உரைகல். பூங்கொடி என்று சொன்னேன்? உண்மை நம் மனசிலே எப்படிச் சுற்றிக்கிளை பிடித்து வாசமிடுகின்றன; வட்டமிடுகின்றன; வளர்ச்சி பெறுகின்றன? நீங்களே அனுபவித்துப்பாருங்கள். மென்மை, செழுமை, பெண்மை தெரியவரும் இன்னும்....? கவிதை பிறர் சொல்லித் தெரிவதில்லை. தானே நாமாக உணர வேண்டியது. படித்தும் பாடியும் பாருங்கள்

—திரு சுகி, அகில இந்திய ரேடியோ, திருச்சி.

தங்கள் உள்ளத்தில் பிறந்த இக்கவிதைகள் என் உள்ளத்தைத் தொடுகின்றன. இன்னும் மற்றவர் உள்ளத்தையும் தொடக் கூடியவை. அரும்புக் குள்ளே மணம் உருவாவது போல் தங்களிடம் கவிதை உருவாகிக் கொண்டிருக்கிறது. அரும்பு மலரும்; இதழ்கள் அவிழும்; மணம் பரவும். தங்கள் கவி மணம் பரவ என் வாழ்த்துக்கள்

—திரு **அகிலன்,** நாவலாசிரியர்.

## கவியோங்க நீடு வாழ்க!

தண்ணார் தமிழ் மணக்கும் சால்புடைய
நன் மனத்தீர்
எண்ணம் மதுவாகி எற்றமொழி
நுரையாகி
விண்ணும் மகிதலமும் விசிறி
எழும்புகின்ற
வண்ணம் கவிபாடும்
மாண்பினையே போற்றுகின்றேன்

*

திருச்சியில் ரேடியோவில்
செந்தமிழ்க் கவிதை வெள்ளம்
விரித்தனிர் என்ப தோர்ந்தேன்
விழைவுறுங் கவிகள் கண்டேன்
அருத்தியும் துடிப்பும் நெஞ்சில்
ஆர்வமும் தெளிந்து வந்தேன்
விருத்திபெற் றின்னு மின்னும்
விளங்கவென் றிசைக்கின் றேனே

*

கன்னியைக் கண்டு காதல்
கமழ்வுறப் பாடும் அந்தக்
கன்னிநன் முயற்சி யாய
கவிதையைக் கண்டேன் பின்னர்
பொன்னியின் வெள்ளங் கண்டு
பூரித்து மகிழ்ச்சி யேறப்

பொன்னியற் கவிதை வந்த
பொற்பினை யறிந்தேன் ஐய!

*

தஞ்சாவூர்க் கோயிலினில் சுவரிற் கண்ட
சாரமனை சித்திரத்தைக் கண்டு வார்ச்சி
நெஞ்சார வியந்தச் சித்திரத்தில்
நிறைபாவர் தன்னையியற் கவிதையாலே
செஞ்சார மொழியிசைத்துப் பாடிநின்ற
திறத்தையும்யா னறிந்துவகை கொண்டேன் [அப்பால்
அஞ்சாத நெஞ்சுடைய புதுமைப் பித்தன்
அரியஎழுத் தைப்போற்றும் பாடல்பார்த் [தேன்

*

செம்பதுமக் கோயில்வளர் அன்னை பூவிற்
சீதையென எழுந்தருளிச் சிறைப்பட்டுள்ளம்
வெம்பிநைந்த எற்றஞ்சொல் ராமகாதை
விளப்பிய அக் கம்பன்சீர் பாடும்பாடல்
பம்புஅன்பில் விளங்குருவ மெடுத்திருக்கும்
பான்மையையும் கண்டுமகிழ் கொண்டேன் [நுந்தம்
அன்புநினைந் திக்கவிதை யாற்றல் மேன்மேல்
அலர்கவென வாழ்த்துகின்றேன் வாழ்க [வாழ்க!

*

புத்தகமாக் கவிதைகளை உருவாக்கிப்
பொலிவுறுத்து பொற்புணர்ந்தேன்
மெத்தநன்றாம்; திருத்தமுறப் பதிப்பித்து
வெளியிடுதல் வேண்டு மன்பீர்
கைத்தலத்து வேலுடைய திருவாளன்
அருளாளன் கருணை யாலே
நித்தமுந்தப் புகழோங்க அன்போங்கக்
கவியோங்க நீடு வாழ்க

திரு. கி. வா. ஜகந்நாதன், ஆசிரியர், "கலைமகள்"

# கவிச் சொல் கேளீர்

திருச்சி அகில இந்திய ரேடியோ நிலையத்தில் 19—1—52 இரவு 9-15 மணிக்கு ஒலி பரப்பப்பட்டது நிலையத்தாரின் அனுமதியோடு பிரசுரிக்கப்படுகிறது.

கன்னித் தமிழ் மொழியில்
கவிஞர் பலர் சொற்கேட்ட
பின்னும் இவ்வானொலியின்
பெட்டியினைத் திறந்து வைத்து
இன்னும் சில கேட்கும்
இச்சையுடன் இப்பொழுது
என்னை எதிர் பார்த்து நிற்கும்
இனிய தமிழ்த் தோழர்களே!

முன்னொரு நாள் காளியம்மன்
முன்னெழுந்து வழிமறிக்க
தன்னுடைய வாய் திறந்து
தம்பலத்தை அவளுமிழத்
தின்னுதிலே மனமே
தித்திக்கும் பேறு பெற
அன்னதிலே பாட்டிசைக்கும்
ஆசு கவி நானல்ல.

பிள்ளைப் பிராயத்தே
பெற்றவரைக் காணாமல்
கிள்ளும் பெரும்பசியால்
கேவியழும் போதினிலே

அள்ளி அவள் கொடுத்த
        அமிலம்மை பால் குடித்து
உள்ளங் கனிந்து கவி
        ஒதுபவன் நானல்ல.

இம்மண் ணுலகினிலே
        இன்புகளும் துன்புகளும்
தம்மைப் பிடித்துலுக்கத்
        தள்ளாடி மெல்ல மெல்ல
சம்மத மில்லா திழுக்கும்
        சாவுடனே செல்லுகின்ற
உம்மைப்போல் நானும் ஓர்
        ஊனுடல மானிடன்தான்.

எப்படியோ எதுக்கோ
        எங்கேயோ அன்றொரு நாள்
ஒப்புவமை அற்ற உயர்
        கலைவாணர் கவிதையிலே
தாம் புதுமை கண்ட மனம்
        தமிழ் வெறியில் கூத்தாட
ஆம் - புதியவோர் கவியாய்
        அரங்கேற வந்துவிட்டேன்.

ஆடுகின்ற மயிலாடலில்
        அலருகின்ற மலரிதழில்
பாடுகின்ற குயிலிசையில்
        பாவையர் தம் திருமுகத்தில்
நாடுகின்ற எம்போன்றோர்
        நாட்டந்தனைக் கவர்ந்து
சாடுகின்ற பான்மையில் தான்
        சமைத்துவிட்டாள் இயற்கை மகள்.

வேறு

புத்தம் புதுமலர்கள் பூத்தழகுப் பூசிப்பில்
புன்னகைத்து நின்றிருக்கும் வண்ணமலர்ப் பூஞ்சோலை
மத்தியிலே உட்கார்ந்து மணங்கமழும் தென்றலிலே
மணிக்கவிதை பாடவரும் மாட்சிமை இங்கெனக்கில்லை

கற்றவரும் மற்றவரும் கைகுவித்து அஞ்சலிக்க
காவலர்கள் கால்பிடித்து கையிலடைப்ப மேந்த
அற்றதுயர் முற்றுமிலா ஆனந்தப் போதையிலே
ஆறாவறா கவிஞனெனும் அதிர்ஷ்டமுமிங்கெனக்கில்லை

காலமெனும் காற்றடிக்க காய்ந்தவிழும் விழியின்
கண்ணீர்த் துளிகளை - ஆம் - கருத்துச் சருகுகளை
கூலக் கடைத்தெருவின் குப்பைகளைச் சேகரிக்க
கூட்டிடுமோர் தொட்டியெனக் குவிக்குமொரு
[பித்தன் நான்

விண்ணளவு முப்பரிகை வேந்தரசு மாளிகைகள்
உள்ளதில வீதியதன் வழி நடுவே [விதவிதமாய்
கண்ணிடையே நீர்ததும்ப கையிலொரு சட்டியுடன்
கைப்பிடியூண் பிச்சைக்கு கதறியழும் வறிஞன் நான்

தாக்கவரும் கொடுவாளைத் தேக்கும் வலிப்படையன்று
தலைவர் சிரந் தாழ்த்தவரும் விலியுடைய சொல்லன்று
ஏக்கத் துடிதுடிப்ப இருதயத்தின் பொருமலொலி
என்னுடைய கவிதையெல்லாம் இன்னவைதான்
[வேறில்லை

வேறு

வளமையுற்ற நெஞ்சினிலே
வாழ்வின்பச் சுவைகூட்டும்
இளமைத் துடிப்பினிலே
இங்ஙனமோர் கவியாகி

உளம்போன போக்கினிலே
ஒருநாள் நடந்து செலக்
களமான காலேஜ்
கட்டிடத்தில் கண்டஇது.

அவள் ஓர் காலேஜ் குமாரி. இதயம் வருடும் மெல்லிய ரோஜா மேனி. சிரிக்கும் செவ்விதழ்கள் என் சிந்தைக்கு இன்பமூட்டின கவிதை பிரவகித்தது. இதுநான் என் முதற்கவிதை கன்னி முயற்சி.

மட்டுப் படாத என்
மாசற்ற காதலே
மொட்டான உன் உளம்
மலராகும் நேர்த்தியை
பட்டான மேனியின்
பாவன மனைத்தையும்
கிட்டாத தமிழிலே
தித்திக்கப் பாடுவேன்
— என்னை நீ மணந்தால்!

குமரி உன் நெஞ்சிலே
குமிழிடும் இளமையை
அமிழ்தான தமிழிலே
அழகோடு பாடுவேன்.
— என்னை நீ மணந்தால்!

**5, 6** ஆண்டுகளுக்கு முன்பு பதினெட்டாம் பெருக்கு வைபவம் காண நானும் நண்பர்களும் காவிரிக்குச் சென்றிருந்தோம். காவிரி கங்கையாக காட்சியளித்தாள். அதே காவிரிக்கு இந்த வருஷம் பதினெட்டாம் பெருக்குக்குப் போயிருந்தேன். அடேயப்பா! இடைக்காலத்தில் எத்தனை மாறுதல்கள்! முந்நாள் நிகழ்ச்சியை கவிதை ருசியுடன் ஒப்பிட்டுப் பார்த்தது என் தமிழ் நெஞ்சம்.

கூதலடித்தது கார்முகில்
　　கூடி விண்மீதில் குதித்தது
கீதமிசைத்ததோர் பூங்குயில்
　　கீழ்த்திசை மெல்லச் சிரித்தது

சீறும் அலைக்கரம் தூக்கிய
　　செக்கச் செவேலென்ற நீரலை
ஆறும் ததும்பி வழிந்தது
　　ஆடி பதினெட்டு அன்றுதான்

பாம்பெனச் சீறிடும் கூதலில்
　　பட்டுத் துகில் நுனியாடவோர்
சாம்பிரத் தோண்டி இடையிலே
　　தாங்கி அலையென வந்தவள்

பூவிரி வண்ண இதழ்களால்
　　புன்னகை தோன்ற அழைத்தனள்
காவிரி நீரில் இறங்கி நான்
　　காதலியோடு நீராடினேன்

அன்று முன்னாளில் நடந்தது
　　ஆண்டு பல பல வாயினும்
இன்று நிகழ்ந்தது போலவே
　　இன்னுமென் நெஞ்சிடையுள்ளது

ஆடி பதினெட்டே இன்றும் முன்
　　ஆண்டினில் போலவே பொன்னியில்
ஓடி வரும் புனலில் பலர்
　　கூடி நீராடிச் செல்கின்றனர்

கூதலடிக்குது கார்முகில்
　　கூடி விண்மீதில் குதிக்குது
கீதமிசைக்குதோர் பூங்குயில்
　　கேட்டிதை வானம் சிரிக்குது

எல்லா மிருக்கிற தாயினும்
என்னுளக் கோயிலின் அம்பிகை
இல்லை யெனைவிட்டுச் சென்றவள்
இன்னும் திரும்பவே இல்லையே.

தஞ்சாவூர் பெரியகோவிலில் ஓர் அற்புத சித்திரம் தீட்டப்பட்டுள்ளது. போர்க்களம்; ஒரு மாவீரன் கையினில் வாளேந்தி கம்பீரத்துடன் படை நடுவில் நின்றுகொண்டிருக்கிறன். பக்கத்தில் காதளவோடிய விழிகளுடன் ஒரு மங்கை துக்கமும். ஏக்கமும் முகத்திலே படர வீரனிடம் ஏதோ யாசிக்கும் பாவனையில் நின்றுகொண்டிருக்கிறுள். இது என்ன கருத்தோடு தீட்டப்பட்டிருக்கலாம் என்று நண்பர்களுக்குள் வாக்குவாதம் கிளம்பிற்று. என் மனதிலே பட்ட கருத்தை கவிதை வடிவில் கொடுத்தேன். அதுதான் இது:—

பஞ்சணையின் மத்தியிலே
பத்தினியாள் அஞ்சையிலே
வெஞ்சமரின் பறைகேட்டு
விட்டு விட்டுங்கிவ்விடத்து
வெட்டுண்டு வீழ்ந்தாருளும்
வீரர்களின் தலை ஓட்டு
வட்டிலிலே செங்குருதி
வாய் மடுத்து நாச்சுடக்கும்
நாய்க்கூட்ட மத்தியிலே
நாதியற்ற முண்டங்கள்
பேய்க்கூத்து ஆடிவிழும்
பிண மலையின் மேலேறி
இன்னும் தன் கைவேலுக்(கு)
இரையளிக்க பகையணியில்
என்னமிதுக் தள்ளதென
இரண்டு விழியுந் தவள
இலக்கினிடம் பாய்ந்துவரும்
இருளிரவின் மின்னொளிபோல்

வலக்கரத்தின் வாள் சுழல
வாரணத்தின் படை நடுவே
சீறிவந்து பாய்ந்திடுமான்
சிங்கம்போல் போர் வெறியால்
வீரிட்டுத் தாவி வரும்
வீரா ! எழில் மாரா !

காமக் கணை பாய்ச்சி
கைப்பிடித்த என்னுளத்தில்
காதத்தழல் மூட்டி
இருளில் எனை விட்டுவிட்டு
கைவாளுக் கூண் தேடி
களம் முழுதும் சுற்றி வரும்
ஐயா ! அப்படை யெனது
அக மிசைப் பாயாதா ?

மனந்துணிந்து களம் புகுமென்
மையல்வெறி காணவும் நீ
சினந்திடுவாய் என்றாலும்
செல்லும் வழி வேறின்றி
விட்டுவிட்டு நீ புகுந்த
வெஞ்சமரின் படுகளத்து
நட்ட நடுவில் துணிந்து
நண்ணிவந்து கெஞ்சுகிறேன்

செல்லரிக்கும் சுவடிகள் போல்
சித்ரவதைக் குள்ளாகி
அல்லும் பகலுமுன(து)
ஆசையினால் சாகுமென
தன்னைத் தகைந்திடுமிவ்
வாயுதத்தை விட்டெறிந்து
இன்பமுற இவ்விடம் விட்
டென்னுடன்வா இல்லையெனில்

கொன்று விடு - ஆம் - உனது
கூர்வாளால் மார்பிளந்து
இன்றே அழித்துவிடு
இதுவே என் கோரிக்கை.

பேறுமன்னர் புதுமைப்பித்தன் மறைந்தார் என்ற செய்தி என் நெஞ்சைப் பிளந்தது. என் குருநாதர் புதுமைப்பித்தனை பாமலரால் அஞ்சலித்தேன்.

பொன்னுடலைப் போற்றுமல்
பூந்தமிழைப் போற்றியதால்
இன்னல்வரும் போதெல்லாம்
இன்பமென ஏற்றதனுல்
தன்னிலைமை பாழாக
தவித்து ஒரு சின்னுளிருந்த
பின்னமை விட்டுப் புதுமைப்
பித்தனெங்கோ போய் மறைந்தான்.
வாசிக்கும் வார்த்தைகளில்
வானமுதைத் தேக்கியதால்
நேசித்து நாம் நமது
நெஞ்சமெனும் பீடத்தே
பூசித்த அப்புலவன்
போய்மறைந்தான் - ஆம் - அதனைப்
பேசிப் பயனிலைதான்
பேதைமனம் கேட்கிறதா ?
சின்னஞ்சிறு கதைகள்
செப்பரிய கற்பனைகள்
மின்னும் புதுக் கவிதை
மேல்நாட்டுப் பாணியிலே
இன்னும் பல துறைகள்
ஏதேதோ கண்டருளி
கன்னித்தமிழ் உயிரைக்
காத்த உயிர் சென்றதுவே
பத்தினியும் நண்பர்களும்
பாதவித்து நிற்கின்றார்
கத்தும் குழந்தை முகம்
கண்ணீரால் மங்கியது

வித்தகர்கள் எல்லோரும்
வெம்பித் துடிக்கின்றார்
அத்தனையும் பாராமல்
அவன் அமரனாகிவிட்டான்!

(வேறு)

பொதிகையில் பிறந்த தென்றல்
புலன் எட்டாத் தொலைவில் எங்கோ
மதிற்சுவர் உள்ளே வாய்ந்த
மலர்ச் சோலை தன்னைத் தொட்டு
திதிக்கின்ற காதல் பேசித்
திடுக்கென்று பிரிந்ததைப்போல்
சதிசெய்து மறைந்துவிட்டான்
சகோதரர் மயங்கித்தேர்ப

கம்பன் கவிதையில் எனக்குத் தனிமோகம் உண்டு. சமீபத்தில் நடந்த கம்பர் விழா ஒன்றில் நான் எழுதி வாசித்த பாடல்கள் இவை.

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி வீழ்த்தி வாகைக்
கள்ளிருக்குந் தாரணியுங் காளைபெருங்
காதையினைக் கவிதை யாக்கி
உள்ளுவந்து பயில்பவர்தம் ஊன் சிலிர்க்க
உடல் சிலிர்க்க உயிர்ப்புக் கூட்டி
கொள்ள நமக் கூட்டியவக் குரிசிலினை
கம்பனெனக் கூறுகின்றோம்

இவ்வுலகம் உள்ளளவும் இயலிசையில்
நாடகத்தில் இனிமை கூட்டும்
செவ்விநறுஞ் செந்தமிழின் சீர்த்திகளும்
பரம்பொருளின் சிறப்பும் உள்ள
அவ்வரையில் கம்பனெனும் அம்புவியின்
கவிதையுநு ஆனஒன்றே
செவ்வையிலுன் காப்பியமும் சீருடையுன்
திருப்பெயரும் சிறக்கும் உண்மை.

விண்ணொளிரும் தாரகையுள் வீசுமெழிற்
றண்மதியம் வேறென் றோங்கும்
வண்ணமிந்த புவியிடையே வாய்ந்த பலர்
பேசுமொழி வகையினுற்ற
மண்ணகத்து மாந்தரெல்லாம் மண்டியிட்டுக்
கைகூப்பி மகிழ்ந்து போற்றும்
கன்னலினைய கவிதைகளால் விண்ணளவத்
தமிழ் வளர்த்தான் கம்ப நாடன்

பாற்கடலின் நடுவிலொரு பாம்பணையிற்
துயில்பவனின் பண்டைக் காதை
போற்றுதலும் பொற்பினதே புவியிடையி
லெனினுமதிற் புதுமை கூட்டி
நோற்றவரும் கண்டறியா நுண்மையெலாந்
தண்டமிழால் நுழைத்துக் காட்டி
எற்றமுறச் செந்தமிழில் இன்பமிகப்
புரிந்தவன் நம் எந்தல் அம்மா.

